# அருள்

...வனன்றி ஓரணுவும் அசையாது



வடதிருமுல்லைவாயில்
ஸ்ரீ வைஷ்ணவீ திருக்கோயில்




தமிழ் மாத முதல் நாள் வெளிவருகிறது

## இந்த இதழில்




அருள்-2 ஏப்ரல்

கருணை-7 15-4-68

சித்திரை, கீலக விலை: 30 காசு

நா. மகாலிங்கம் பி.எஸ்ஸி.,
எம்.ஐ.இ.



9-11-63 அன்று திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்க எட்டாவது மகா நாட்டில் ஆற்றிய உரை

இங்கு எழுத்துத் துறையில் பெரிய பெரிய ஜாம்பவான்கள் நிறைந்த விழாவில் என்னே அழைத்து ம கா நா ட் டை த் தொடக்கும் பணியையிட்டிருக்கிறார்கள். தமிழ் கூறும் நல்லுலகில் எதிர்காலத்தில் பல காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. நாட்டில் நடக்கக் கூடிய காரியங்கள் திட்டமிட்ட சிலரால்தான் நடக்கின்றன. இன்று இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்குக் காரணம், பாரதி.

## எழுத்தாளர் எண்ணட்டும்

இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவோமே என்று அன்று சொன்னபோது இதென்ன பைத்தியக் காரத்தனம் என்று சொன்னவர்கள் இன்று நடைமுறையில் வ ரு ம் போ து ம், பார்க்கும் போதும் பாரதியை நினைப்பவர்கள் குறைவு. ஆகவே எழுத்தா ள ர் க ளு க் கு க் கௌ ர வ ம் கொடுக்க வேண்டிய பொறுப்பு ஏற்பட்டுவிட்டது.

தேசத்தில் பல சிரமங்கள், குறைபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. ஏன் என்பதைச் சிந்திக்க வேண்டாவா? சரியானபடி சிந்தித்துத் திட்டமிடாததே தான் இதற்குக் காரணம். பல்வேறு துறைகளில் சரியாகச் சிந்தித்துப் பொறுப்புடன் இருக்க வேண்டும். இதை அதிகாரத்தில் இருக்கிறவர்கள் உணர வேண்டும். எழுத்தாளர்களுக்குச்சங்கம் அவசியம்தான். பல்வேறு சிந்

தனைகளை, பல்வேறு கருத்துக்களைப் பொதுவாகச் சிந்தித்து நாட்டுக்கு வேண்டிய விஷயங்களை விவாதித்து முடிவு செய்ய வேண்டும்.

கலாச்சாரம் சம்பந்தமாகமாறுபட்ட கருத்து இருக்காது, ஒற்றுமைக்காக இந்தச் சங்கம் செயல் புரியவேண்டும்.

முன்பெல்லாம் பலர் தமிழ் படிக்கப் பயப்பட்டார்கள். நிகண்டு, பாட்டு முதலியவற்றை மனப்பாடம் பண்ணவேண்டும் என்ற பயம் இருந்தது. அந்த நிலை மாறிச் சமுதாயத்தில் வசனமாகச் சுலபமாகப் பரப்பக் கூடிய அளவுக்கு முன்னேறியிருக்கிறது.

நான் பள்ளியில் படிக்கும் போது என்னைக் கவர்ந்தது நாரண-துரைக்கண்ணன் எழுதிய 'நான் ஏன் பெண்ணுய்ப் பிறந்தேன்' என்ற கதை. தமிழ் என்றும் சுதந்திரமாகப் பரவியது. இன்று வேகமாகப் பரவுவது தவருன எண்ணமல்ல. இப்போது செய்திப் பத்திரிகைகள் அதிகமாக வந்தபின் எழுத்தாளர்களுக்குச் சந்தர்ப்பமில்லை. இன்று ஒருவரே எழுதியிருந்தாலும் பல பேர் செய்த பஞ்சாமிர்தமா என்ற சந்தேகம் வந்துவிடுகிறது!

பத்திரிகை மூலம் பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் இலட்சியத்தை மறந்தால் எழுத்துலகிற்குப் பெரும் நஷ்டமாகிவிடும். நாடு சுதந்திரம் அடைந்த பின், தொழில், வணிகம், விஞ்ஞானம் வளர்ந்தாலும், மொழி வளரவில்லை என்று வருந்தவேண்டியதிருக்கிறது.

தொழில், வணிகம், விஞ்ஞானங்களின் மூலமாக மொழி வளராது என்றும், இன்று நாட்டில் உள்ள நிலையில் ஆங்கிலம்தான் முக்கியமானது என்றும் சிலர் நினைக்கிருர்கள். எப்படித்தான் மொழி வளருவது? இதற்கெல்லாம் எழுத்தாளர்கள் நாம்என்ன செய்திருக்கிறேம் என்பதைச் சிந்தித்து அதற்கு வழிவகை காண வேண்டும். எழுத்தாளர்கள் இலக்கியங்களை மட்டுமே எழுதினுல் போதாது. தொழில் நுணுக்கங்களையும், தேசத்தில் நடக்கும் விஷயங்களில் எது சரி, எது சரி இல்லை என்பதையும் ஆராய்ந்து எழுத வேண்டும்.

தமிழ் வளர்ச்சி அடையக் கல்லூரிகளில், பொறியியல், மருத்துவப் பாடங்களில் தமிழ் இருக்க வேண்டும். அதற்குச் சட்டசபை அங்கத்தினர்கள் என்ற முறையில் நாங்கள் முயற்சி செய்கிறேம்.

ஜனநாயக தேசமாகையால் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து நல்லது கெட்டது எது என்பதை எழுத வேண்டும்.

ஏனெனில்,

ஜனநாயக சர்க்கார் மக்களின் எண்ணத்தைப் புரிந்து செயல்பட வேண்டும்.

ஜப்பான் நாட்டை எடுத்துக் கொண்டால் அங்குச் சர்வகலாசாலையில் ஜப்பான் மொழியில் தான் ஆராய்ச்சி முதல் யாவும் சொல்லித் தருகிருர்கள்.

ஆகவே கல்லூரிகளில் தமிழில் சொல்லிக் கொடுக்க முடியும் என்ற நிலை வளரவேண்டும்.

ஆங்கிலம் அவசியம்தான். அதன் மூலமாகத்தான் படிக்க முடியும் என்ற எண்ணம் நமக்கு மிகவும் கஷ்டத்தைத் தருகிறது:

பல துறைகளிலுள்ள நூல்கள் வெளி வர வேண்டுமானுல் சங்க காலத் தமிழில் வரவேண்டும் என்கிருர்கள் பலர். அதனுல் எத்தனை பேர் புரிந்துகொள்ள முடியும்.

எழுத்தும் சேர்க்கையும் மாறுதல் அல்ல. பல்வேறு விஷயங்களைப் பார்த்தால் ரஷ்யா கண்டுபிடித்த 'ஸ்புட்னிக்' என்ற பெயரைத்தான் அமெரிக்கா, ஜப்பான் ஜெர்மன், பிரிட்டன் ஆகிய நாடுகள் மேற்கொண்டுள்ளன!

ஐரோப்பிய நாடுகளில் தொழில் நுணுக்கம் என்ற வார்த்தைகள் லத்தீன் மொழியில் இருக்கின்றன. ஆகவே புதிய மாறுதல்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

நாட்டில் இதற்காக எழுத்தாளர்கள் ஆராய்ச்சி செய்யவேண்டும். இன்று பத்திரிகைச் சுதந்திரம் என்றால் தெருவில் பேசுவதும் குழாயடிப் பேச்சும் எழுத முடியுமா? அடுத்த வாரம் இன்னாரைப் பற்றி எழுதப்படும் என்ற பத்திரிகைகள் ஏராளம்.

ஆகவே, மஞ்சள் பத்திரிகைகள் விஷயத்தில் அரசினர் கவனமாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்வதுடன் எழுத்தாளர்கள் தாங்கள் எதை எழுத வேண்டும் என்பதை எழுத்தாளர் சங்கம் முடிவு செய்யவேண்டும். அந்த வரம்புகளை அரசினர் கைக்கொண்டு எழுத்தாளர்களுக்கு ஊக்கத்தையும் சிறப்பையும் அளிக்க வேண்டும் என்று கூறி என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

இளைஞர்கள் ஒவ்வொரு துறையிலும் பாடுபட்டு முன்னேற வேண்டும். நாட்டின் முன்னேற்றம் இளைஞர் கரங்களிலேயே இருக்கிறது.

# இளைஞர் பொறுப்பு



இன்று உலகில், அமெரிக்கா பொருளாதாரத் துறையில் முன்னணியில் இருக்கிறது. அத்துடன் போட்டி போட்டுக் கொண்டு ரஷ்யாவும் வந்து கொண்டிருக்கிறது என்றால், அந்த முன்னேற்றம் எந்த அடிப்படையில் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அந்த நாடுகள் வெறும் வாய்ப் பேச்சினாலேயே உயர்ந்துவிட வில்லை என்பதை நன்கு நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

## மேடைப் பேச்சு

இன்று பலர் நினைக்கிறார்கள், மேடைகளில் அழகாகப் பேசுவதன் மூலமாக, பல பிரசங்கங்களின் மூலம் நாட்டில் உள்ள பல பிரச்சினைகளைத் தீர்த்துவிட முடியும் என்று. ஆனால், நாட்டின் பிரச்சினைகளைத் தீர்ப்பது மக்களின் திறமையையும், அறிவையும் ஆற்றலையுமே பொறுத்திருக்கிறது. வெறும் பேச்சினால் மட்டுமே பிரச்சினைகளைத் தீர்த்துவிட முடியாது.

பேச்சினாலேயே நாம் "முன்னேறிவிட முடியும்" என்றால், இந்த விஷயத்தில் நம்மைத் தோற்கடிக்கக் கூடிய நாடு, உலகில் வேறு இருக்கவே முடியாது! அந்த அளவிற்கு அரும் பெரும் பேச்சாளிகள் நம் நாட்டில் உள்ளனர்.

நம் நாட்டின் முன்னேற்றம் நமது திறமையைப் பொறுத்திருக்கிறது. விவசாயத்துறையை எடுத்துக் கொண்டால், தொன்று தொட்டுத் தமிழ் நாட்டு மக்கள் விவசாயம் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால், அந்தக் காலத்திலிருந்து இந்தக் காலம் வரை

---

சி. சுப்பிரமணியம்

---

விவசாயத்தில் எந்த அளவு நாம் அபிவிருத்தி யடைந்திருக்கிறோம் என்பதைப் பார்க்கும் பொழுது, உலகில் உள்ள மற்ற நாடுகளுடன் நமது நாட்டு விவசாயத் துறையை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது நாம் எவ்வளவு பிற்போக்காக இருக்கிறோம் என்பதும் நன்கு விளங்கும்.

### புதிய முறைகள்

ஆயிரம்ஆயிரம் வருஷங்களாக நாம் ஒரு முறையைப் பின் பற்றி வந்திருக்கின்றோம். இது நம் பாட்டன், முப்பாட்டன் காலத்தில் ஏற்பட்டது. இந்த முறையிலிருந்துமாறவேண்டியது அவசியமல்ல—அப்படியெல்லாம் மாறக் கூடாது, இருக்கிறபடியே இருந்தால் போதும் என்றால், நாம் விவசாயத்தில் முன்னேற்றம் காணவே முடியாது. அத்துடன், இருக்கும் உற்பத்தியும்குறையும். இவ்வாறின்றி,புதிய புதிய முறைகளை அனுசரிப்பதன் மூலந்தான் இன்று விவசாயத் துறையில் முன்னேற்றம் காண முடியும் என்பதைத் தெளிவாக உணர வேண்டும்.

நாம் கைத்தொழில்களின் அவசியத்தைப் பற்றியும்பேசுகிறோம். விவசாயத்தைப் போலவே கைத்தொழில்களும் வளர்ச்சி பெற வேண்டும் என்கிறோம். மேல் நாடுகள் இன்று பெருமளவுக்கு விவசாயத் துறையில் முன்னேறி இருப்பதற்குக் காரணமே தொழில் அடிப்படையில் ஏற்பட்ட முன்னேற்றமும், மாறுதல்களுந்தாம். தொழில்களின் மூலமாக நல்ல விவசாயக் கருவிகள், நல்ல உரங்கள், மற்றச் சாதனங்களை அவர்கள் உற்பத்தி செய்ததால்தான் விவசாயத் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட முடிந்தது. ஆகவே, புதிய புதிய கருவிகளை விஞ்ஞான அறிவின் மூலம் பெருக்கி அதைப் பயன் படுத்தியதன் காரணமாகத்தான் முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள் என்பதை உணர்கிறோம்.

### மனமாற்றம் தேவை

ஆகவே, விவசாயத் துறையில் முன்னேற்றம் காண வேண்டுமென்றால், கைத்தொழில்களைப் பெருக்க வேண்டும். நமக்கு வேண்டியசாதனங்களை உற்பத்தி செய்வதால் மட்டும் பயன் ஏற்பட்டு விடாது. மக்களின் மனமும் இதற்கேற்ப மாறவேண்டும். மக்களின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாக இருப்பது விஞ்ஞான அறிவு. இந்த விஞ்ஞான அறிவை விவசாயத்திற்காகப் பயன்படுத்த வேண்டும் என்ற சூழ்நிலை இன்று நம் நாட்டில் ஓரளவுக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில்தான்இன்று பல நாடுகள் முன்னேறி இருக்கின்றன.

தொழில் வளமும், விவசாய வளமும் ஏற்பட வேண்டுமானால் இளைஞர்கள் வெறும் பட்டதாரிகளாக மட்டும் இருந்தால் போதாது. ஒவ்வொரு துறையிலும் அறிவும், திறமையும், ஆற்றலும் பெற்றவர்களாக விளங்க வேண்டும்.

ரஷ்யா, அமெரிக்கா ஆகிய நாடுகளின் முன்னேற்றத்தை எடுத்துக் கொண்டால், அந்த முன்னேற்றம் எந்த அடிப்படையில் ஏற்பட்டிருக்கிறது என்று பார்க்கும் பொழுது, உண்மையான முன்னேற்றத்திற்குக் காரணம் அங்கு இருக்கக்கூடிய விஞ்ஞான மேதைகளும், தொழில் நிபுணர்களும், எஞ்சினியர்களுந்தான். இப்படி வெவ்வேறு துறைகளிலும் நிபுணத்துவம் பெற்ற

வர்கள் இருப்பதால்தான் பல்வேறு துறைகளிலும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன்.

ஆகவே, இன்று இளைஞர்கள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் பங்கு கொண்டு பாடுபட வேண்டுமானால், அவர்கள் ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்க வேண்டும். அதற்கான ஆர்வத்தையும், திறமையையும், ஆற்றலையும் பெற்றாக வேண்டும். அறிவும், திறமையும், ஆற்றலும் இருந்தால் மட்டும் போதாது. அவற்றை நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணமும், ஒழுக்கமும், கட்டுப்பாடும், கடினமாக உழைக்கும் போக்கும் வேண்டும். அந்த அடிப்படையில்தான் முன்னேற்றம் காண முடியும்.

## இளைஞர் பொறுப்பு

இளைஞர்கள் இந்தியாவின் பிற்கால வாழ்விலும், தாழ்விலும் பங்கு கொள்ளக் கூடியவர்கள். இளைஞர்கள் பாரத நாட்டை மேலும் மேலும் முன்னேற்ற, நல்ல சக்தியைப் பெற வேண்டும். அந்த முயற்சியில் வெற்றியும் பெற வேண்டும். இது விவசாயத்துக்கு மட்டுமின்றி, மற்ற துறைகளுக்கும் பொருந்தும்.

இன்றைய தினம் இளைஞர்கள் தீர்மானம் செய்து கொள்ள வேண்டியது என்னவென்றால், ''நாம் ஒவ்வொருவரும், நமது தகுதிக்குத் தக்கபடி நாட்டின் முன்னேற்றத்திற்கு அறிவையும், திறமையையும், ஆற்றலையும் பயன்படுத்த வேண்டும்'' என்பதுதான். நாட்டிற்குப் பணி செய்வதற்காக அறிவையும், திறமையையும் ஆற்றலையும் உயர்த்திக் கொள்வதோடு, ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும், கடினமாக உழைக்கும் போக்கையும் ஏற்படுத்திக் கொள்ளத் தயாராகித் தொண்டாற்ற வேண்டும். இதுதான் நாட்டிற்கு மிகவும் தேவையாக இருக்கிறது என்பதை மீண்டும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

## சக்திகளை அலசிப் பார்

இன்று நம் நாட்டில் தனி நபர் உரிமை, பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் எல்லாம் இருக்கின்றன. எதை வேண்டுமானாலும் எழுதலாம்; எது வேண்டுமானாலும் பேசலாம் என்ற முறையில் சுதந்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனால் ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் மனதில் எழுகின்ற கருத்துக்களை, அவரவர்கள் சக்திக்குத் தக்கபடி பேசியும் எழுதியும் வருகிறார்கள்.

இம்மாதிரிப்பலவிதமான கருத்துக்கள் நம்மிடையே பரவும் பொழுதுதான் நமக்கு நல்ல சக்தி பிறக்கிறது. அந்த நல்ல சக்தி மேலும் மேலும் வளர்ந்தால் தான் உண்மை அறிவு பயன்பட்டு, அதன் மூலம் நாட்டில் முன்னேற்றம் ஏற்படும். அந்த அடிப்படையில்தான் நாட்டில் பரவுகின்ற பல்வேறு சக்திகளையும் இளைஞர்கள் அலசிப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இன்று ஒருசிலர் நம்மிடையே எந்தவித மாறுதலும் ஏற்பட வேண்டிய அவசியமே இல்லை என்று சொல்லுகிறார்கள். இருப்பது அப்படியே இருக்கட்டும் என்றும் சொல்லுகிறார்கள். இது சில விஷயங்களில் உண்மையாகக் கூட இருக்கலாம். ஆனால், விவசாயத் துறையைப் பொறுத்தவரை, பழைய முறையிலேயே நாம் விவசாயம் செய்தால் முன்

னேற்றம் காண முடியாது. புது முறைகளை அனுசரிக்கத் தயாராக இருந்தால்தான் விவசாயத்தில் நாம் முன்னேற்றம் காண முடியும்.

### பழமை விரும்பிகளுக்கு

முன்பெல்லாம் சிறிய சிறிய கருவிகளைக் கொண்டுதன் காரியங்களைச் செய்து வந்தோம். ஆனால், பெரும்அளவில் தொழில்கள் வளர வேண்டுமானால், பழையனவற்றையே மனத்தில் வைத்துக் கொண்டு, புதுமை வேண்டாம் என்றால் முடியாது. இவைகளை யோசித்துப் பார்க்காமல் சிலர், ''நம்முடைய பழக்க வழக்கங்கள், சட்ட திட்டங்கள் எல்லாம் பழைய முறையிலேயே இருக்கட்டும்'' என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கு ஒன்று சொல்லுகிறேன்.

நமக்கு, முன்பு போக்குவரத்துச் சாதனம் கட்டை வண்டி. அதற்குச் சாதாரண மண் ரோடு போதும் அந்தக் காலத்தில். வண்டிகள் எப்படியும் போகலாம். வரலாம். அதற்குச் சட்ட விதி முறைகள் தேவையில்லாமல் இருந்தன. ஆனால், இன்றைக்கு மாட்டு வண்டி நமக்குப் போதவில்லை. கார்கள் வேண்டும்; பஸ்கள் வேண்டும் என்ற நிலை வந்துவிட்டது. இதற்குப் பழைய மண் ரோடு போதாது. மண் ரோட்டில் கார் போனால், தூசி வரும். வேகமாகவும் போக முடியாது. மக்கள் ஆரோக்கியத்தையும் பாதிக்கும். ஆகவே, கார்கள் செல்லுவதற்கேற்ப, நல்ல கல், தார், சிமெண்டு ரோடுகள் அமைக்க வேண்டியிருக்கிறது. அதுமட்டும் அல்ல;கார்கள் எந்த இடத்தில் எப்படிப் போக வேண்டும்? எப்படித் திரும்ப வேண்டும்? என்ற கட்டுப்பாடுகளும், விதிமுறைகளும் வைத்துக் கொண்டால்தான் கார்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாமல் செல்ல முடியும். மாட்டு வண்டியை விட்டு விட்டுக் காரை உபயோகிக்க முற்பட்டிருக்கும் பொழுது, கார் வேண்டியது அவசியம்தான்; ஆனால், மாட்டுவண்டிக்கு இருந்த கட்டுப்பாடற்ற நிலைமையும், சட்ட திட்டங்களுமே வேண்டும் என்றால், அது எப்படி முடியும்? இந்தக் கட்டுப்பாடுகளும் விதிகளும் இல்லாவிட்டால் கார் ஓட்ட முடியுமா? ஓட்டினால்தான் ஆபத்து வராமல் தடுத்துவிட முடியுமா?

### கட்டை வண்டிக் காலமா ?

ஆகவே முடிவு செய்ய வேண்டியது மாட்டு வண்டி வேண்டுமா? கார் வேண்டுமா? என்பதுதான். கார் வேண்டுமானால், அதற்கான முறையில் ரோடுகளையும் அதற்கேற்ற சட்ட திட்டங்களையும் அனுசரிக்கத்தான் வேண்டும். காரை வைத்துக் கொண்டு, பழைய ரோடுகளையும் மாட்டு வண்டிக் காலத்துச் சட்டத்தையுமே தொடர்ந்து வைத்துக் கொண்டிருந்தால், எந்தக் காரையும் ஆபத்தின்றி, ஒழுங்காக ஓட்ட முடியாது. ஓட்டினாலும் பேராபத்தில்தான் முடியும்.

ஆகவே, இளைஞர்கள் ஒரு முடிவு எடுக்கவேண்டியிருக்கிறது. பழங்காலத்து மாட்டு வண்டிப் பிரயாணத்திலேயே வாழலாமா? அல்லது கார் அடிப்படையில் வாழ்க்கை வேண்டுமா? என்று யோசனை செய்யவேண்டும். கார் தான்வேண்டும். ஆனாலும், பழங்காலத்துச் சட்ட திட்டங்களை மாற்றக்கூடாது என்று சிலர் சொல்கிறார்கள். இவர்கள் சொல்லுவது காலப் போக்கிற்கு ஒத்ததல்ல.

### தலைவிதி தத்துவம்

ஏழை, பணக்காரர் என்பது அவரவர் தலைவிதி. போன பிறவியில் புண்ணியம் செய்தவன் பணக்காரன், பாபம் செய்தவன் ஏழை என்ற கருத்தை முன்பு மக்கள் நம்பி ஒப்புக் கொண்டார்கள். ஆனால் இன்றைக்கு பணக்காரன் பணக்காரனாகவே இருக்கட்டும்; ஏழை ஏழையாகவே இருக்கட்டும் என்பதை ஒப்புக்கொள்ள மக்கள் தயாராக இருக்கிறார்களா என்று பார்க்கும்போது, ''தயாராக இல்லை'' என்ற பதில்தான் கிடைக்கிறது.

அரசியல் சுதந்திரம் நமக்குக் கிடைத்த பிறகு நாட்டில் இருக்கக்கூடிய 21 வயதுள்ள ஆண் பெண் அனைவருக்கும் ஓட்டு உரிமை கொடுத்து, ''மக்கள் பார்த்து எந்தச் சர்க்காரையும் அமைக்கலாம்'' என்ற அடிப்படையில் அரசியலமைப்பு ஏற்படுத்தியிருக்கிறோம். இந்த மாதிரிக் கூடாது. பணக்காரர்களுக்கு மட்டுமே ஓட்டுரிமை இருக்கலாம் என்று இன்று யாரும் சொல்லிவிட்டு வெளியில் போக முடியுமா? ஓட்டுரிமை கொடுத்த பிறகு ஏழை ஏழையாகவே இருக்க வேண்டும், அது தான் அவன் தலைவிதி என்று சொன்னால் யாராவது கேட்டுக் கொண்டிருப்பார்களா?

### சமுதாய எழுச்சி

இன்றையச் சமுதாய எழுச்சியில், நாட்டில் உள்ள மக்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், கொடுத்தாக வேண்டும். மாட மாளிகைகள் இல்லாவிட்டால் கூட, சிறிய வீடுகளையாவது ஒவ்வொருவருக்கும் கொடுத்தாக வேண்டும். எல்லாக் குழந்தைகளுக்கும், நாட்டுப்புறமாக இருந்தாலும் சரி; நகர்ப்புறமாக இருந்தாலும் சரி, எந்த மதத்தைப் பின் பற்றுபவராக இருந்தாலும் படிக்க வசதி செய்து கொடுக்க வேண்டும். இது போன்ற எல்லா வசதிகளும், எல்லா மக்களுக்கும் செய்து கொடுக்க வேண்டும். இதுதான் நாம் இன்றைக்கு மேற் கொண்டிருக்கும் மகத்தான காரியமாகும்.

இந்த மகத்தான காரியத்தை எப்படிச் செய்து முடிப்பது என்பதுதான் பிரச்சினை. இதற்காகத் தான் ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு வருகிறோம். ○

ஆர். ஏ. ராவ்

தென் கன்னடத்தில் சமுத்திரக்கரைப் பகுதியில் உடுப்பி க்ஷேத்திரத்திற்கு அருகில் ''பாஜக''த் தலத்தில் மத்ய கேஸபட்டர் என்ற ஓர் அந்தண சிரேஷ்டர் தன் மனைவி வேதவதி அம்மையாருடன் வசித்து வந்தார். நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவரும், வைதீகப் பற்றுள்ளவரும், வேத—வேதாந்த நூல்களில் தேர்ச்சி பெற்றவருமான மத்ய கேஸபட்டர் பாகவதம், பாரதம், இராமாயணம், கீதை முதலிய நூல்களின் தத்துவங்களைப் பொது மக்களுக்கு எடுத்துக் கூறுவதைப் பணியாக ஏற்றிருந்தார். பொதுமக்களும் அவரது கருத்துக்களைக் கேட்டு, அனுபவித்து, ஆனந்தித்து வந்தார்கள்.

மத்ய கேஸபட்டர் கிரகஸ்தாசிரமம் நடத்திவரும் காலத்தில் இரு புத்திரர்கள் பிறந்து, குழந்தைப் பருவத்திலேயே மரித்து விட்டார்கள். இதனால் தம்பதியரின் மனம் வேதனைப்பட்டது; விசாரம் அதிகமாயிற்று.

புத்திரரல்லாதவர் ''புத்'' என்னும் நரகத்தை அனுபவிக்க நேரிடுமாதலால், அவர்கள் அக்குறையைப் போக்கிக்கொள்ளப் பல ஆண்டுகள் ஆண்டவனைத் துதித்து வந்தார்கள். சிற்றின்பத்தில் நாட்டமற்றவர்களாக—ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு யாராலும் தங்கள் குறை நீங்காது என்பதை உணர்ந்து அவனையே பன்னிரண்டு ஆண்டுகள் தியானித்து வழிபட்டு வந்தனர். பிரதி தினமும் ஸ்ரீ அனந்தேஸ்வரன் சன்னிதானத்திற்குச் சென்று இருவரும் தங்களுக்கு ஸ்ரீ பரசுராமனைப் போன்ற ஓர் ஸத்புத்திரன் பிறக்க வேண்டுமென்று நித்யானுஷ்டானம் செய்வது வழக்கமாயிருந்தது.

இந்நிலையில் பூலோகத்தில் அதர்மம் மேலோங்கி நின்றதாலும், மாயா பைஸா ஸத்தால் மக்கள் மயக்கமுற்றுத் தவறான

# ஸ்ரீ வேதவ்யாஸர்
# ஸ்ரீ மாத்வாசாரியார்

வழிகளில் சென்று கொண்டிருந்ததாலும் தேவர்கள் அனைவரும் ஸ்ரீமந் நாராயணனிடம் முறையிட்டார்கள். இறைவனோ அவரோ, கவலையுற வேண்டாம் என்றும், பூலோகத்தில் மத்ய கேஸபட்டருக்கு ஸத்புத்திரனாக அவதரிக்கும்படி வாயு பகவானுக்கு ஆக்ஞை பிறப்பித்திருப்பதாகவும் தேவர்களுக்குச் சமாதானம் கூறினார். பகவானுடைய வாக்குப்படி கி. பி. 1238 ஆம் வருஷம் விஜயதசமி தினத்தன்று பாஜக க்ஷேத்திரத்தில் மத்ய கேஸபட்டருக்கும், வேதவல்லி அம்மையாருக்கும் குழந்தையாக ஸ்ரீ மாத்வாசாரியார் ஜனித்தார். அவரது இயற்கைப் பெயர் 'வாசுதேவர்' என்பதாகும்.

ஸ்ரீ வாயு பகவானே மாத்வாச்சாரியாராக அவதரித்தார் என்பதை ''ஸ்ரீ மாத்வ விஜயம்'' உணர்த்துவதுடன், பல அறிஞர்களும் கூறியிருக்கிறார்கள்.

ஸ்ரீ ராமாவதாரத்தில் வாயுபகவான் ஹனுமாராகவும், ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் பீமனாகவும் ஸ்ரீ நாராயணனின் அரிய உபதேசங்களை மக்களிடையே பரப்புவதற்காக,கலியுகத்தில் ஸ்ரீபாஜக க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மத்ய கேஸபட்டருக்கு ஸத்புத்திரனாக ஸ்ரீ மாத்வராக அவதரித்தார். இதனைப் புராண, இதிஹாஸங்கள் நிரூபணம் செய்துள்ளன.

இளம் வயதில் ஸ்ரீ மாத்வருக்கு உப நயனமானதும், வேத பாடசாலைக்கு அனுப்பப்பட்டார். கற்காமலேயே வேதம் முழுவதையும் ஒப்புவித்து, அதற்கும் வியாக்யானம் செய்யவும் அவர் முற்பட்டபோது, அனைவரும் அதிசயித்தனர். உடற் பயிற்சி செய்வதிலும் வல்லவராக விளங்கிய இவர், சில காலத்திற்குப் பின் பெற்றோரின் அனுமதி பெற்று, அச்சுதப்ரேச்சர் எனும் அத்வைதத் துறவியிடம் ஸந்யாஸம் பெற்றுக்கொண்டார்.

ஸ்ரீ சங்கரருடைய ''ப்ரம்ம ஸூத்ர பாஷ்ய''த்தை ஆராய்ந்து, அதிலுள்ள முரண்பாடுகளை எடுத்துக் காட்டி, பிரம்மம் ஆன ஆனந்தத்தை அளிக்கும் வேதாந்த இரகசியத்தை அனைவருக்கும் விளங்க வைத்தார். இதனால் இவருக்கு ''ஆனந்த தீர்த்தர்'' என்ற நாமதேயத்தைச் சூட்டினார்கள். இஷ்ட சித்தி போன்ற அத்வைத நூல்களைக் கொண்டு, வேதக் கருத்துக்கள் பற்றிப் பலர் இவருடன் வாதம் புரிந்து தோற்றனர். அதனால் இவருக்கு ''அனுமாந தீர்த்தர்'' என்ற பெயர் ஏற்பட்டது.

தனக்கு முன்பிருந்தவர்களும், தமக்குச் சம காலத்தவர்களும் அறிந்திராத காரணத்தால் இவர் ''ஸர்வக்ஞயர்'' என்றும் போற்றப்பட்டார்.

1750-ஆம் ஆண்டு முதல் இவர் வடநாடு, தென்னாடு எங்கும் சுற்றுப் பயணங்களை மேற்கொண்டு, தன் சித்தாந்தத்தைப் போதித்ததுடன், பல பெரியார்களுடன் வாதித்து வெற்றியும் கண்டார். பிறகு தம் சிஷ்யர்களுடன் பாதசாரியாகவே பத்ரி க்ஷேத்திரம் சென்று, அங்கு ''பிரம ஸூத்ர பாஷ்யம்'' இயற்றினார். பிறகு இவருக்குச் சிஷ்யர்களாக மாற மிகப் பலர் பெருமையுடன் முன் வந்தனர். முக்கியமாக, ஸோபந பட்டர், ஸ்யாமா சாஸ்திரி, திரிவிக்ரம பண்டிதாச்சாரி முதலியோர் இவரது சிஷ்யர்களானார்கள். ஸோபன பட்டர் ''பத்மநாப தீர்த்த''ராகவும், ஸ்யாமா சாஸ்திரி ''நரஹரி தீர்த்த''ராகவும் போற்றப்பட்டனர். திரிவிக்ரம பண்டிதாச்சாரியார் ஸ்ரீ மத்வ

ரின் ''பிரம ஸூத்ர பாஷ்யத்'' திற்கு உரை எழுதினார். வட நாட்டு யாத்திரை முடிந்த பின் ஸ்ரீ மாத்வர் உடுப்பிக்கு வந்து த்தவகியாலும் அர்ஜுனனாலும் பூஜிக்கப்பட்டு வந்த ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்தை அங்கே பிரதிஷ்டை செய்தார். யக்ஞங்களில் உயிர் பலியிடுவதை அவர் தடுத்துவந்தார்.

ஸ்ரீ மாத்வாசாரியார் ஒரு சமயம் சந்திரநதிக் கரையில் அமர்ந்து ''ஐத்ரேய உபநிஷ்''த்தை வியாக்யானம் செய்தபோது வேத வார்த்தை ஒவ்வொன்றுக்கும் மூன்று பொருட்கள் உண்டென்றும், மகாபாரத வாக்கியங்கள் ஒவ்வொன்றுக்கும் பத்துப் பொருட்கள் உண்டென்றும் குறிப்பிடுகையில், சிலர் நகைத்துவிட்டு அவ்வாறிருப்பின் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு மூன்று பொருட்களை ஒவ்வொரு வார்த்தைக்கும் சொல்லும்படி கேட்க, ஆச்சாரியார் உடனே ''விச்வம்'' என்ற முதல் திருநாமத்தை வியாக்யானம் செய்து வியாகர்ண விதிப்படி பிரித்துப் பிரித்துப் பொருள் கூறிக் கொண்டே சென்றதைச் சபையோர் கேட்டு, வாயடைத்துப் போய் அவரிடம் தங்கள் தவறுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர்.

ஸ்ரீ மத்வ கேஸரின் இளைய புத்திரனும், ஸ்ரீ மாத்வரின் சகோதரருமான ஸ்ரீ விஷ்ணு தீர்த்தர் இளம் வயதிலேயே பல நூல்களைக் கற்று, பல கலைகளில் சிறந்தோங்கி விளங்கினார். ஆயினும் மண், பெண், பொன் ஆன மூன்று ஆசைகளால் பலனில்லை என்பதையும், பரலோகத்தைத் தேட வேண்டுமென்பதையும் உணர்ந்து — பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும், கர்மங்களையும் முடித்த பின்னர் ஸ்ரீ மாத்வாசரியாரிடம் வந்து அவரை வணங்கி, தனக்குச் சன்யாசம் அளிக்குமாறு வேண்டினார். அவ்வாறே, விஷ்ணு தீர்த்தருக்கும் மற்றும் ஏழுபேருக்கும் கண்வ தீர்த்தத்திற்கு அருகில் அச்சுத விருட்சத்தின் கீழ் சந்யாஸம் கொடுக்கப்பட்டது. இந்த எட்டுப் பேர்களும் ஸ்தாபித்த எட்டு மடங்களும் இப்போதும் உடுப்பியில் பரிபாலிக்கப்படுகின்றன.

ஸ்ரீ மாத்வாசாரியாரிடம் ஜெய சிம்மன் என்ற அரசன் மிகுந்த பற்றுதலும், பக்தியும் கொண்டிருந்தான். தன் அரசவையிலேயே தங்குமாறு அவ்வரசன் ஸ்ரீ ஆச்சாரியாரைக் கேட்டுக் கொண்டான். ஆனால் அவர் அதற்குச் சம்மதிக்கவில்லை.

ஸகல கலாவல்லபனும், ஸகல சக்தியும் உள்ளவனுமான ஸ்ரீமத் நாராயணனே ஸர்வோத்தமன். மோக்ஷம் ஒவ்வொரு ஜீவனின் உரிமை, ஸந்தோஷத்தின் விடா அனுபவம், இதற்கு அழிவு கிடையாது. ஸர்வேஸ்வரியனான நாராயணனின்பால் உள்ள பக்தியால் அடையக் கூடியது பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் மூன்றே பிரமாணங்கள், பரமாத்மாவான பரந்தாமனையடைய வேதங்களே பிரமாணம் என்ற தத்துவம் ஸ்ரீ மாத்வாசாரியாரால் உலகுக்கு நிரூபிக்கப் பட்டது.

ஸ்ரீ மாத்வாசாரியார் பிரம்ம ஸூத்ரம், கீதை, மூல ராமாயணம், பாரதம், பாகவதம் போன்ற 37 நூல்களை எழுதினார்.

அவரது சிஷ்யர்களுள் டீக்காச் சாரியார், வியாஸ ராயர், ராகவேந்திர தீர்த்தர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

தனது 80-வது வயதில் ''அய்த்ரேய உபநிஷத்''தை விளக்கிக்

கொண்டிருக்கும்போதே பிங்கள வருஷம்-மாக மாதம்-சுக்ல பட்சம்-நவமி திதி அன்று மறைந்து, தனது குருவான வேத வ்யாஸர் இருக்கும் பத்ரிகாஸிரமத்திலிருப்பதாக வேதங்களும், இதர நூல்களும் பகர்கின்றன.

* * *

ஸ்ரீ மாத்வர் பிறந்த இடத்தில் ஒரு வீடு கட்டப்பட்டு யாத்திரீகர் தங்கும் தர்மசாலையாக அது இப்போது பயன்பட்டுவருகிறது. இதனுள் ஓர் ஆலயமும் அமைந்திருக்கிறது. இவ்வாலயத்தில் ஸ்ரீ மாத்வாசரியாரின் பாதங்கள் இருப்பதாகக் கருதப்பட்டு அதைப் பூஜித்து வருகிறார்கள்.

அக்காலத்தில் ஜெயஸிம்மன் என்ற அரசன் ஆண்டு வந்ததாகவும், அவன் ஸ்ரீ ஆச்சாரியாரிடம் அளவற்ற பக்தி பூண்டிருந்ததாயும் குறிப்பிட்டோம். அவர் காலத்தில் மக்கள் கலைகளில் தேர்ச்சியுற அவர் பெரிதும் உதவி வந்தார்.

அத்தகைய அக்காலக் கலைஞருள் வெங்கட குப்பய்யர் என்ற அந்தணரும் ஒருவராவர். அவர் ஸம்ஸ்கிருதம், கன்னடம், தெலுங்கு போன்ற பாஷைகளில் நல்ல தேர்ச்சி பெற்று, இஷ்டஸித்தி முதலிய அத்வைத நூல்களை வைத்துக்கொண்டு வேத கருத்துக்களைப் பற்றிய விஷயங்களைப் பலருடன் விவாதம் செய்து வெற்றி பெற்றார். அவர் அக்காலத்தில் செடி கொடிகளின் பச்சை இலைகளின் சாறைக்கொண்டு ஸ்ரீவேத வ்யாஸர் பத்ரிகாஸ்ரமத்தில் ஸ்ரீ மாத்வாசாரி யாருக்கு வேத நூல்களைக் கற்பிக்கும் காட்சியைச் சித்திரமாக அமைத்திருக்கிறார். இச்சித்திரமானது சுமார் 1533-ம் வருஷ வாக்கில் எழுதப்பட்டதாகும்.

விஷ்ணு, வாயு இருவருமே உலகுக்குச் சிறந்த ஞானத்தை ஊட்டுவதற்காக வேத வ்யாஸர், ஆனந்ததீர்த்தர் என்ற பெயர் கொண்டவர்களாய் பூமியில் அவதரித்து, பத்ரிகாஸ்ரமத்தில் வசித்து வருவதாகச் சொல்லப்படுகிறது. த்வாபர யுகத்தில் நாராயணன் பராசரரால் ஸத்யவதியிடம் அவதரித்து மறைந்த மூல வேதங்களை வெளிப்படுத்தி, அவற்றின் அர்த்தங்களை நிர்ணயிக்க ''பிரம்ம ஸூத்ரங்''களை ரஸனை செய்தவாறு பத்ரிகாஸ்ரமத்தில் வ்யாஸ முனிவராக வசிப்பதாக நம்பிக்கை.

கலியுகத்தில் ஸூத்ரங்களின் உண்மையான அறிவு மறைய, பிரமாதி தேவர்கள் முகுந்தனிடம் சரணடைந்து வேண்ட, அவர்தான் மூன்று யுகத்தில் அவதரித்ததால், கலியுகத்தில் தனக்கு அவதாரமில்லை எனவும், ஆயினும் வாயுதேவனைப் பூமியில் அவதரிக்கச் செய்து, அவரைக் கொண்டு வ்யாஸ ஸூத்ரத்திற்கு உரிய பாஷ்யத்தை எழுத ஆக்ஞாபிப்பதாகக் கூறி, அவ்வாறே வாயுவானவர் பூமியில் அவதரித்து, வ்யாஸ ஸூத்ரத்திற்கு வியாக்யானங்களையும், மற்றும் பல த்வைத ஸித்தாந்த கிரந்தங்களையும் இயற்றி, அவற்றை வேத வ்யாஸரிடம் காண்பிப்பதற்காகச் சென்று அங்கேயே வசித்து வருகிறார்.

இவ்வாறாக, ஸ்ரீ வாயு பகவானே மாத் வாசாரியாராக உலகில் அவதரித்து, அருள் வழங்கிச் சென்றிருக்கிறார். ●

நன்றி: சுதேசமித்திரன்

கன்னட தேசத்தில் பிறந்து சிறந்த பக்தரான புரந்தரதாசருக்குப் பக்தி எப்படி வந்தது என்பதை இந்தக் கதை அழகாகச் சொல்லுகிறது!

# மாய மூக்குத்தி

கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி ஐயர் பி.ஏ.

பண்டரிபுரத்தில் கிருஷ்ணப்ப நாயக்கர் என்று ஒரு காசுக் கடைக்காரர் இருந்தார். அவர் கருமியிலும் கருமி. அவருடைய மனைவி தெய்வ பக்தியுள்ளவள். தினந்தோறும் ஸ்ரீ பண்டரிநாதனுடைய ஆலயத்துக்குப் போய்த் தெய்வ வழிபாடு செய்து வருவது வழக்கம். ஒரு நாள் அவள் கோவிலில் இருந்தபோது ஒரு பிராம்மணர் அவளைப்பார்த்து ''தாயே! என் பிள்ளைக்கு உபநயனம் செய்யவேண்டும். தாங்கள் ஏதாவது பண உதவி செய்யவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார். ''நீர் எங்கள் வீட்டுக்காரரைக் கேளும். அவர் ஏதாவது உதவி செய்வார்'' என்று அவள் பதில் சொல்லிவிட்டு வீட்டுக்குப் போய்விட்டாள்.

பிராம்மணர் கிருஷ்ணப்ப நாயக்கருடைய வீட்டுக்குப் போய் அவரைத் தன் மகன் உபநயனத்துக்குப் பண உதவி செய்யுமாறு கேட்டுக் கொண்டார். நாயக்கர் அனுதாபத்துடன் பிராம்மணரை நோக்கி, ''சரி. நாளைய தினம் வாரும். பார்க்கலாம்'' என்று சொல்லியனுப்பினார். பிராம்மணருக்குப் பரம சந்தோஷம். ''நாளைய தினம் போனால் நாயக்கர் நூறு ரூபாயாவது கொடுப்பார். உபநயனத்தைச் செய்து முடித்து விடலாம்'' என்று மனக் கோட்டை கட்டிக்கொண்டார். மறுநாள் நாயக்கரிடம் போனார். காலை 7 மணிக்குப் போனவர் மாலை 5 மணி வரையில் திண்ணையில் காத்துக்கொண்டிருந்தார். கடைசியில் தலையை மெதுவாக உள்ளே நீட்டி ''இன்றைய தினம் வரும்படி உத்திரவாச்சு. காலையிலிருந்து காத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று மெதுவாகச் சொன்னார் பிராம்மணர். ''ஓஹோ! உபநயனமா? நாளைய தினம் வாரும்'' என்றார் நாயக்கர். பிராம்மணர் சப்த நாடியும்

ஒடுங்கியவராய் வீட்டுக்குத் திரும்பினர். மறுநாளும், அதற்கு மறுநாளும், ஒரு வாரம் வரையில் இந்தக் கதையே நடைபெற்று வந்தது. பிராம்மணர் தைரியத்தை வரவழைத்துக் கொண்டார். நாயக்கரிடம்காலையில் போனர். ''நாயக்கர்வாள்! உபநயனத்துக்கு இன்னும் இரண்டு நாள்தான் இருக்கிறது. ஏதாவது கொடுப்பதாக யிருந்தால் காலதாமதம் செய்யாமல் கொடுத்தால் நன்மையாக இருக்கும்'' என்ருர். ''சரி. இந்தாரும்!''என்று நாயக்கர் ஒரு செல்லாத காசைப் பிராம்மணரிடம் சொடுத்தார். ''நீர் போய் வரலாம்'' என்று விடைகொடுத்தனுப்பி விட்டார். பிராம்மணருக்கு அழுகை அழுகையாக வந்தது. கொல்லைப்பக்கமாக வீட்டுக்குள் புகுந்து, நாயக்கருடைய சம்ஸாரத்தினிடம் அவர் கொடுத்த காசைக் காட்டி, ''இதற்குத்தானு என்னை ஒரு வாரமாக அலையும்படி செய்தார்? உபநயனத்துக்குக் குறைந்தது ஐம்பது ரூபாயாவது செலவாகுமே! நான் என்னசெய்வேன்?'' என்று அழுதார் நாயக்கருடைய மனைவி உடனே தன் மூக்கிலிருந்து வைர மூக்குத்தியைக் கழட்டிப் பிராம்மணரிடம் கொடுத்து''இதை விற்றுச்செலவு செய்துகொள்ளும்'' என்று சொல்லி அவரை அனுப்பி வைத்தாள்.

பண்டரிபுரத்தில் வைர மூக்குத்தியை வாங்க ஆள் கிடையாது பிராம்மணர் அதைக்கிருஷ்ணப்ப நாயக்கரிடமே கொண்டு போனர். அவர் ''ஓய் பிராமணரே! இது என்ன சாதா கல் மூக்குத்திதானே! உமக்கு எவ்வளவு பணம் தேவை?'' என்று கேட்டார். ''எனக்குப் பையன் உபநயனத்துக்காக ஐம்பது ரூபாய் தேவை. இதன் பெறுமானத்தைக் கொடுங்கள்'' என்ருர் பிராம்மணர். நாயக்கர் அவரிடம் ஐம்பது ரூபாயைக் கொடுத்து அவரை அனுப்பி விட்டு, சந்தோஷத்தில் குதித்தார். ''மூன்னூறு ரூபாய் பெறுமானமுள்ள மூக்குத்திக்கு ஐம்பது ரூபாயைக் கொடுத்து ஏமாற்றி விட்டோம்'' என்று அவர் மனதுக்குள் சந்தோஷம் பொங்கிக் கொண்டிருந்தது. பிராம்மணரை யாராவது கலைத்துவிடப் போகிருர் என்று கடைப் பையனைக் கொண்டு பிராம்மணரைக் கவனிக்கச் சொன்னர். ஆனுல்அவர் ஸ்ரீபண்டரிநாதனுடைய ஆலயத்துக்குள் நுழைந்து மறைந்துபோய் விட்டார்!

நாயக்கர் மூக்குத்தியைப் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டு உள்ளே சாப்பிட வந்தார். தன் மனைவியின் மூக்கில் மூக்குத்தி இல்லை. ''எங்கே மூக்குத்தி?'' என்று கேட்டார். ''எண்ணெய் தேய்த்து முழுகும்போது கழட்டி வைத்தேன். அதை எடுத்துப் போட்டுக்கொள்கிறேன்'' என்று சால் சாப்புச் சொன்னுள். ''மறுபடியும் இரவு சாப்பிட வரும் போது மூக்குத்தியைக் கேட்பாரே! அப்போது என்ன பதில் சொல்வது? நான் பிராணத்தியாகம் செய்துகொண்டு விடுகிறேன்'' என்று தீர்மானம் செய்துகொண்டு ஒரு கிண்ணத்தில் விஷம் கலந்த பாலை ஊற்றி, ''ஏ பண்டரிநாதா! உன் ஆலயத்தில் பார்த்த உன் பக்தனுக்கு உதவி செய்வதற்காக என் மூக்குத்தியைக் கொடுத்தேன். இப்போது என் உயிரையே உனக்கு அர்ப்பணம் செய்கிறேன்''என்று சொல்லிக் கொண்டே, விஷத்

தைப் பருகுவதற்குக் கிண் ணத்தை வாயருகில் கொண்டு போனுள். உடனே, ''கலுக்'' என்ற சப்தத்துடன் ஒருபொருள் கிண்ணத்தில் விழுந்தது. அது அவளுடைய மூக்குத்திதான்! அவள் ஸ்ரீபண்டரிநாதனுடைய கிருபையை மெச்சி அதைஎடுத்து மூக்கில் போட்டுக் கொண்டு தன் கணவனிடம் காண்பித்தாள். நாயக்கர் பெட்டியைத் திறந்து பார்த்தார். பெட்டியில் வைத்த மூக்குத்தி மாயமாக மறைந்து போய்விட்டது! ''எப்படிஉனக்கு மூக்குத்தி கிடைத்தது?'' என்று நாயக்கர் கேட்க, அவருடைய மனேவி நடந்த விஷயங்களே ஆதி யோடந்தமாகச் சொன்னுள்.

நாயக்கருக்கு விவேகம் பிறந்து விட்டது! ''ஏ பண்டரிநாதா! உன் சோதனேக்கு நான் எம்மாத் திரம்? இதோ என் சொத்து, சுதந்திரம் எல்லாம் உனக்கே! என் உயிரை உனக்கேஅர்ப்பணம் செய்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டு ஸ்ரீபண்டரிநாத னுடைய புகழைப் பாடவாரம் பித்தார். அவர்தான் புரந்தர தாசர் என்ற கன்னட தேசத்துப் பக்தர். சூரிய சந்திரர் உள்ள வரையில் அவருடைய புகழ் அழியாமல் ஓங்கி நிற்கும்!

# திருவருள் அறியும்

இறைவன் திருவருள் துணை செய, நிலையான செயல்கள் எங்கும் நிகழ்கின்றன. பலகோணத்தில், இவைகளைப் பார்த்து மகிழ்பவர் பலருளர். வாழ்விக்கும் அவர்கள் கண்காணிப்பில், அடியேன் வளர்ந்தவன்.

அருட்பெருஞ் ஜோதி தனிப் பெருங் கருணையை, அகில உலகிற்கும் வள்ளலார் அறிவித்தவர். அவர் அருளிய அனுபூதித் திருமுறைகள் ஆறு.

எனையளித்த அன்னையின் பெயர் சின்னம்மை. அவர்கள் அளியேற்கு அருளொடு அமுதூட்டிய அந் நாளில், அருட்பா அமுதையும் இடையிடை அருத்துவது உண்டு. பெற்ற தந்தையார், அதனில் ஆர்வத்தை மேலும் பெருக்கினர்.

பள்ளியில் ஆசிரியர், பாடத்தை ஆரம்பிக்குமுன், வள்ளலார் திருவுருவத்தை முதலில் வணங்குவர். எனது அன்னையின் பிறப்பிடமான திருவிற்கோலத் திருப்பதியில், ஒரு தெய்விகத் திருச்சபை. அங்கே திருவருட்பா பாராயணம் தினமும் நிகழ்வுறும். செல்வேன். அதைத் தவறாது சிரவணிப்பேன். பாசுர நய ஒலி, செவியுள் புகுந்து சிந்தையில் நிறைவுறும். மாபெரும் அந்நேரத்தில், என்னை மறப்பேன். வீட்டிற்குச் செல்ல வேண்டும் எனும் எண்ணத்தைத் துறப்பேன். அதுகண்ட அருளாளர் பலர், அன்பு காட்டி அணைப்பர். இவ்வளவும் எளியேனது இளமைச் செய்திகள்.

அதன்பின் வாழ்க்கையில், திருவருட்பா பாக்கள் பல உணர்விற் புகுந்தன. உறவு காட்டின. உவகை யூட்டின. மேலும் அத் தொடர்பு, என்னென்னவோ செய்தது எங்கெங்கோ ஈர்த்தது. சாதுக்கள் பலரைச் சாரவித்தது. அருளார் வழிகளை அறிவித்தது.

படிப்பது அருட்பா. எண்ணுவது அருட்பா. எழுதுவது அருட்பா என்னுமாறு, அருளார் வள்ளலார் திருவுள்ளம், ஒன்றும் போதா என்னையும் ஒரு பொரு

**குகத் திரு இரசபதி அடிகள் திருவருட்பா முழுவதற்கும் விரிவுரை தந்திருக்கிறார்கள். இவருடைய இப்பணி, மிகப் பெரும் பணி. அண்மையில்தான் இவர்கள் வள்ளலார் திருவடி சேர்ந்தார்கள்.**

ளாக்கி ஆள்கிறது என்று எண்ணும் போதெல்லாம், என்னையும் மறந்து இருகரம் குவியும். இது வரை இடைக்காலச் செய்திகள்.

வலிந்தாண்ட திருவருட்பாவிற்கு, சிறக்க ஏதேனும் சேவை செய்ய வேண்டும் என்னும் ஆர்வம், இடையிடை என்னில் எழுவது உண்டு. அதற்குரிய காலமும் நேரமும் அருளும் திருவருள் என்று எண்ணி வாளா இருந்தேன்.

எண்ணியவாறு, சென்னை பெரியமெட் மெர்ச்சண்ட் கிளப்பில், சன்மார்க்க சபை ஒன்று தோன்றியது. தெய்வமணிமாலை விரிவுரை நிகழ்த்துமாறு ஆர்வம் காட்டி ஆணையிட்டது. அதனைச் சிரமேல் ஏற்றுச் செயல் செய்தேன். இரண்டு ஆண்டுகளாக இச்செய்தி.

இவ்விரிவுரைகளிற் கலந்த சன்மார்க்க அன்பர்கள் பலர், பழைய வண்ணையில், திருவருட்பிரகாச வள்ளலார் சமரச சுத்த சன்மார்க்க சபை எனும் உத்தம நிலையம் ஒன்றை உருவாக்கினர். பண்புடைய அவர்கள் பணித்தபடி, திருவருட்பாவில் உள்ள மகாதேவ மாலை, நடராஜபதி மாலை, சிவநேச வெண்பா முதலிய பல பகுதிகளை, பதினாறு ஆண்டுகள் விரிவுரை நிகழ்த்தி, அன்பர்களொடு இன்பம் கொண்டு இருந்தேன்.

அக்காலங்களில், இவ்விரிவுரைகள் நூல் வடிவம் பெறில் நலமாகும் என்று, அன்பர்கள் பலர் இடையிடை அறிவிப்பதுண்டு. அவர்களது அன்புமொழிகளை நினைக்கும் போதெல்லாம், இப்படியும் ஒருகாலம் நேருமோ என்னே! யாரே அறிவர் திருவருள் ஆக்கம் என்றெல்லாம் மனம் எண்ணலாயது. உத்தமர்கள் சிந்தனை உருவாகும் என்பதில், என்றும் நம்பிக்கை எனக்குண்டு.

திருக்குறள் நம்பி ஊ. வ. தட்சிணாமூர்த்தி முதலியார் அவர்கள், சால்புடைய ஒரு நல்ல நேரத்தில் சந்தித்தனர். "பிரதி அமாவாசையன்றும் மறுநாளும், வேலூர் வி. கே. விநாயக முதலியார் அவர்கள் கல்யாண மண்டபத்தில் திருவருட்பா விரிவுரை நிகழும். அதற்கானபொறுப்பை, ஈகையிற் சிறந்த மெரினாகபே உரிமையாளர் வி. கே. விநாயக முதலியார் ஏற்பர். பேச்சுருவம் எழுத்துருவம் ஆகும் பொறுப்பை யாம் ஏற்றுக் கொள்வம்; எழுத்துருவம் நூல் உருவம் ஆகும் பொறுப்பை வடாற்காடு மாவட்ட சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் ஏற்றுக் கொள்ளும்" என்று, அன்பு முகம் காட்டி அறிவித்தார்கள்.

சிலிர்த்தது உடல். சிந்தை நெகிழ்ந்தது. "எண்ணிய நான் எண்ணியவாறு எனக்கருளும் தெய்வம்" என்னும் பொன்னுரை திருவருட்பா உளத்திற் புகுந்தது. இனி நமக்குப் பிறவி இல்லை என்று எண்ணி இன்பக் கண்ணீர் வடித்தேன்.

சங்க ஆணையின்படி, அங்குத் திங்கள் தோறும், நியதி முறையில் இரு விரிவுரைகள் நிகழ்கின்றன. முதல் திருமுறையின் முற்பகுதியான திருவடிப் புகழ்ச்சியுரை, விமலன் அருள் துணையால் இன்று வெளிவருகின்றது.

இதுகாறும் கூறியவாற்றால், இளமை முதல் ஈர்த்து, கல்லாம் மனத்தைக் கனிவாக்கி, உணர்விற் புகுந்கு ஒளிவிளக்கேற்றிய வள்ளல் பெருமான் திருவருளும், நாநயம் மிக்க சன்மார்க்க சங்க அன்பர்களது நல்லாசியுமே இவ்வுரை நூலுருவம் பெற்றது அன்றி, இதனில் என் செயல் என்பது எதுவும் இல்லை. உரையில் நான் இல்லை என்பதை என் உள்ளம் அறியும். எவர் உளத்தும் இருக்கும் திருவருள் அறியும்.

கவிச் செல்வம் என்பது அரிய செல்வம். அதற்காக ஒரு இனத்தார் எதையும்ஈடாகக்கொடுத்து விடலாம் என்று தெள்ளத் தெளிந்து ஆசிரியர்கள் சொல்லுவார்கள்.

தமிழரது கவிச் செல்வம்,இதர மொழிகளைக் கவனிக்கும்போது, மிக வளமான செல்வந்தான்; ஒருவருக்கு, ஆயுள் முழுதும் திளைத்து அனுபவிக்கத் தக்க செல்வந்தான்.

ஆனாலும், இழந்துபோன தமிழ்ச் செல்வத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், எக்களிப்பை விட ஏக்கந்தான் அதிகமாய் விடுகிறது.

அகஸ்தியரைப்பற்றி எத்தனையோ விஷயம் தெரிய வருகிறது. பல்லாயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன் பொதிகை மலைச்சாரலில் இருந்தவர் என்று நமக்குத் தெரியும். இசையில் மிக உயர்ந்தவர் என்பதும்தெரிய வருகிறது. இதை எல்லாம் விட தமிழ்க் கவிக்கு அவர் செய்த தொண்டு மிகப் பெரிதாயிருந்தது. கைக்கு வந்த அளவில்லாத தமிழ்க் கவிகளை அவர் திரட்டி வைத்திருந்தார். அது மாத்திரம் அல்ல; கேட்டவர் மனசையும் இறைவனது மனசையுமே உருக்கும்படியான எத்தனையோ கவிகளை அவராகவே பாடியும் வைத்திருந்தார். தமிழ் மக்களால் என்றுமே மறக்க முடியாதபடி இருந்தன அந்தக் கவிகள்.

என்றும் உள தென் தமிழ்
இயம்பி இசை கொண்டான்

என்று எப்படிப் பாராட்டியிருக்கிறார் கம்பர்!

ஆனாலும், அந்த அகஸ்தியர் திரட்டி வைத்த நூலிலிருந்தோ, பாடி வைத்த நூலிலிருந்தோ ஒருவரி கூட நமக்குக் கிடைக்கவில்லை. அகஸ்தியர் போகட்டும், இன்னொரு விஷயம்.

ஏதோ இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் ஒரு கவிஞர் இருந்தார். அவர் பாடிய கவிகள் அபார வேகம் கொண்டனவையாயும், கேட்பவர் உள்ளத்தைக் கவர்வனவாயும் இருந்தன.

கவிஞர், கொச்சி என்று இப்போது வழங்குகிற வஞ்சியில்

# முத்
# தொள்
# ளாயிரம்

முத்தொள்ளாயிரம் என்ற மூன்று தொள்ளாயிரம் பாடல்கள் எப்படிப் பிறந்தன என்பதை, ரசிகமணி டி. கே. சி, தனக்கே உரிய நடையில் சொல்லுகிறார்.

டி. கே. சி.

சில வருஷங்கள் இருந்தார். அப்படி இருக்கும்போது ஒருநாள் அவருக்குக் கவியொன்று தோன்றியது. மன்னனும் சகாக்களுமாகக் குழுமி இருக்கும்போது பாடலைப் பாடினர். கவியைக் கேட்டார்களோ இல்லையோ எல்லோரும் அதிசயித்துப் போனார்கள். போன போன இடமெல்லாம் பாடலைப் பாடிக்கொண்டிருந்தார்கள் குளிக்கும்போதும் சாப்பிடும் போதும், பாடிக்கொண்டே இருந்தார்கள். நண்பர்களைக் கண்டால் நலம் விசாரிப்பதற்குப் பதிலாகப் பாடலைக் கேட்டீர்களா என்று பாடினார்கள். கவிஞரை இப்படியும் அப்படியுமாகப் புகழ்ந்தார்கள்.

இத்தனை உத்ஸாகமும் கும்மாளியும் கவிஞருக்குத் தெரிய வந்தது. கண்கூடாகவும் பார்த்துக் கொண்டார். அவருக்குண்டான ஆனந்த பரவசத்தைச் சொல்லவா வேணும்! இதயமானது நெகிழ்ந்து, கரை இல்லாத ஆனந்த சமுத்திரமாய்விட்டது. ஆனந்த சமுத்திரம் சும்மாவா இருக்கும்? எப்படி எப்படி எல்லாமோ அலைகள், சுழல்கள், கொந்தளிப்புகள்! பாற்கடலிலிருந்து அமிர்தம் என்றும், சந்திரன் என்றும், இலட்சுமிதேவி என்றும் கிளம்பி வந்த மாதிரிப் பாடல்கள் வந்தன.

ஒவ்வொரு நாளும் ஒரு பாடலாவது வரும். சூரியோதயமானதும், சரி இன்றைக்கு ஒரு பாடல் வரும் என்று அரசனும், அரசனைச் சேர்ந்தவர்களும் எதிர் பார்ப்பார்கள். எதிர் பார்த்த படியே பாடல் ஒன்று நிச்சயமாய் வரும். பாடலைக் கேட்ட பிறகுதான்அன்றைக்குச் சூரியன் உதித்ததாகத் தோன்றும். அன்றைய வாழ்க்கைக்கு அவ்வளவு தெளிவையும், இன்பத்தையும் ஊட்டியது, அந்த ஒரு பாடல்.

இந்த விதமாக வருஷம் ஒன்று, இரண்டு, மூன்று என்று கழிந்தது. பாடல்களைக் கணக்கிட்டுப் பார்த்ததில் தொள்ளாயிரம் என்று கண்டார்கள். வாய் நிறைந்த எண்ணாய் இருந்தது. 'சேரத் தொள்ளாயிரம்' என்று பெயர் கொடுத்து நூலைப் போற்றி வந்தார்கள்.

சேர மன்னன் பல பரிசுகளைக் கவிஞருக்கு அளித்தான். கவிஞரும் விடைபெற்றுக்கொண்டு வஞ்சியிலிருந்து உறையூருக்குப் போனார். உறையூரில் தான் சோழ மன்னன் அப்போது வசித்து வந்தான். சோழ மன்னனைப்பற்றித் தினம் தினம் கவியொன்று பாட அதுவும் ஒரு தொள்ளாயிரம் ஆயிற்று.

கடைசியாக மதுரைக்குச்சென்றார். பாண்டியனுடைய பாராட்டுதலையெல்லாம் பெற்றார். அற்புதமான கவிகளைப் பாடினார். அவைகளும் தொள்ளாயிரமாயின.

ஆகவே, சேரன் சோழன் பாண்டியன் இவர்கள்மீதுபாடிய தொள்ளாயிரமான மூன்று தொள்ளாயிரங்களும் சேர்ந்து ஒரு நூலாகி முத்தொள்ளாயிரம் என்ற பெயரோடு வழங்கி வந்தது.

### காலம்

கவிஞரைப் பற்றிய பெயர் தெரியாது. காலமும் தெரியாது. பாடல்களைப் பார்க்கும் போது, ஏதோ இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ளன என்று சொல்லவேண்டியிருக்கிறது.

வெண்பாவில் அமைந்துள்ள எதுகைகளும் மோனைகளும் பூர்வமான வைப்பைக்காட்டுகின்றன.

கவிஞருக்கு மக்கள் இதயப் பண்பு இன்னதென்று தெரிந்

திருக்கிறது; எல்லாவற்றையும் விட கவிப் பண்பு இன்னதென்று தெரிந்திருக்கிறது.

உள்ளத்தில் கண்ட ஒவ்வொரு உண்மையும், எப்பேர்ப்பட்ட உண்மையானுலும் சரி, அற்புதமான கவியாக உருவெடுத்து ஒளிவீசுகிறது. ஒவ்வொருகவியும் பல வர்ணப் படலங்களை வெளியிடும் மணியாக இருக்கிறது. இந்த விதமாக இரண்டாயிரத்து எழுநூறு (2700) பாடல்களை உதவிப் போனுர் கவிஞர்.

ஏதோ சிலர் அவைகளைப் பாராட்டியிருக்கிறுர்கள். சமீப காலம்வரை, அதாவது நானூறு ஐந்நூறு வருஷங்களுக்கு முன் வரையில் முத் தொள்ளாயிரத்தைச் சிலர் போற்றி வந்திருக்கிறுர்கள். அவர்கள் கையில் முத்தொள்ளாயிர ஏடு இருந்தது என்பது தெரிய வருகிறது. பிறகு ஏட்டைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை.

புறத்திரட்டு

கடைசியாக, புறத்திரட்டு என்னும் நூலை யாரோ ஒருவர் தொகுக்க நேர்ந்தது. விஷயங்களை நாலடியார் திருக்குறள் முதலிய நூல்களில் பாகுபாடு செய்த மாதிரி கடவுள்வாழ்த்து, அவையடக்கம், நீத்தார் பெருமை, பொறையுடைமை, அரண், நகர், கைக்கிளை (காமத்துப்பால்) என்று வகுத்துக் கொண்டு, அந்த அந்த அதிகாரங்களுக்கு ஒத்த செய்யுள்களை, கண்ட கண்ட பல நூல்களில் இருந்ததெல்லாம் எடுத்து வைத்தார். ஏதோ நம்முடைய புண்ணிய வசத்தால், முத்தொள்ளாயிர ஏடும் அவர் கையில் இருக்க நேர்ந்தது. அந்த ஏட்டிலிருந்தும் சில பாடல்களைப் புறத்திரட்டில் ஆங்காங்கு பெய்து வைத்தார். நமக்குக் கிடைத்துள்ள முத்தொள்ளாயிரப் பாடல்கள் எல்லாம் புறத்திரட்டில் பெய்துள்ளவைதாம்.

அப்படிக் கிடைத்த பாடல்கள் எந்த விதத்திலும் நூற்றெட்டுக்குமேல் இல்லை. ஆகவே 2700-108 = 2592 படால்கள் ஒழிந்தே போய்விட்டன. இந்த நூற்றியெட்டுப் பாடல்களிலும், பூரணமாயில்லாத பாடல், சிதைந்த பாடல், போலிப்பாடல் முதலிய பாடல்களை ஒதுக்கிப் பார்த்தால் முத்தொள்ளாயிரம் என்னும் பெயரோடு நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் தொண்ணூற்றைம்பது பாடல்களையும் ஆயுள் நாள் முழுவதும் நாம் பாடிப் பாடி அனுபவித்துக்கொண்டிருக்கலாம். பாடப்பாட வாய் பால் மயமாகும்!

அத்தனை அற்புதமான மணிகளை இழந்து நிற்கிறது தமிழுலகம். இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களும் கிடைத்திருந்தால், ஆயுள் நாள் முழுதும் அவைகளைப் பாடிப்பாடி ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கலாம் நாம். நம்மோடு மட்டுமல்ல; இன்னும் ஆயிரக்கணககான வருஷங்களுக்கு நம்முடைய சந்ததியாரும் அனுபவித்துக்கொண்டிருக்கலாம்—இந்த அனுபவத்திலிருந்து எத்தனையோ அரிய நூல்களை எழுதித் தமிழையும் வளம் படுத்தலாகும்.

இந்தவிதமாக நம்முடைய நஷ்டத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், நம்மைவிடத் துர்ப்பாக்கியர்கள் வேறுபாருமில்லை என்றே சொல்லலாம்.

நாடகம்

தமிழர்கள் நாடகத்தில் முங்கி முழுகினவர்களாகத் தெரிகிறது. சாமான்யமாக இப்போது வழங்கி வருகிற கோவைப் பிரபந்தங்களைப் பார்த்தால், எல்

லாச் செய்யுள்களும் நாடகத் துறைகளாகவே இருக்கும். கலம் பகத்தைப் பார்த்தாலும் அனேக மாக நாடகச் செய்யுள்கள்தாம். அவ்வளவு ஆசை, நாடகத்தில் நம்மவருக்கு.

ஒரு நீதியைச் சொல்ல வந்த இடத்திலும் ஒரு நாடக நிலையில் நின்று பேசுபவர்கள் நம்ம வர்கள்.

தோழியைப் பார்த்து நாயகி சொல்லுகிறதாக ஒரு பாடல்: "நாயகன் ஏதோ தடுக்க முடி யாத காரியத்தில் கட்டுப்பட்டி ருக்கிறான். சரி, அப்படியானால் வர இயலாது என்றுதானே சொல்லவேணும் அவன்! அதை விட்டு விட்டு, இங்கே நம்மிடம் ஓடி வந்து 'மாலையில்வருகிறேன்' என்று வேண்டுமென்றே பொய் சொன்னான் அல்லவா?" இந்த ஆற்றாமையை நாலடியார் செய் யுள் ஒன்று விளக்குகிறதைப் பார்ப்போம்.

இசையா ஒரு பொருள்
இல்லென்றல் யார்க்கும்
வசையன்று: வையத்து
இயற்கை; நசையழுங்கச்
சென்றோடிப் பொய்த்தல்,-
நிறைதொடீஇ! செய்ந்நன்றி
கொன்றாரில்க் குற்றம்
உடைத்து.

இது போலக் காதலனது நாட்டு வளத்தையும் சேனை வளத்தையும் நாயகி வாயில் வைத்துச் சொல்லுவதும் காதல் துறையைச் சேர்ந்தது.

பாத்திரங்கள்

முத்தொள்ளாயிரத்தில் வந் துள்ள வர்ணனைகள் தனித்த முறையில் பார்த்தாலே மிக அழகாய்ச் சுவைததும்புவனவாய் இருக்கின்றன. மேலே சொன்ன படி காதல் துறையில் வைத்துப் பார்க்கும்போது, வர்ணனை களுக்கு எத்தனையோ ஒளிப்பட லங்களும் தெளிவும் ஏற்படுகின் றன. இந்த முறையிலேயே,

நசையழுங்க — ஆசையினால்
மனம்சோரும்படி,
நிறை தொடீ இ—தோள்
வளையங்களை ஒழுங்காய்
அணிந்த தோழியே!
செய்ந் நன்றி கொன்றாரில்
குற்றம் உடைத்து—

—ஒருவர் செய்த குற்றத்துக்கு மாறாகத் தீமை விளைத்தல் போன்ற பாதகமல்லவா இது!

வர்ணனைப் பகுதிகளையும் வீரப் பகுதிகளையும் பார்த்து அனுப விக்க வேண்டும்.

நேரான காதல் துறைக்கு வந் தோமானால், பாத்திரங்கள் பேசு வது, தனிப்பட்ட நாடக முறை யாக இருக்கிறது. முக்கியமாக நான்கு பாத்திரங்கள் வந்து தொழில் செய்யப்பார்க்கிறோம். அதலாவது நாயகியாகியபெண்; அவளது ஆர்வத்தையும் சோர் வையும் எக்களிப்பையும் இன்ன தென்று அளந்து சொல்ல முடி யாது.

இரண்டாவதான பாத்திரம், பெற்ற தாய். அவளுக்கு ஒரே பயம். "ஐயோ, காதல் வெறி கொண்டு விட்டாளேநம்முடைய மகள். ஊரார் என்ன சொல்லப் போகிறார்களோ" என்று மக ளைக் கண்டிக்கிற காரியம் ஒரு நாடகப் பாங்கு.

மூன்றாவதாக, நாயகியை வளர்த்தெடுத்த செவிலித் தாயர்கள் அவர்களுக்குத் தங்கள் பெண்களிடத்தில் அமோகமான ஆசை. காதல் விஷயமாய் உத் ஸாகமாய்ப் பேசுவார்கள். உளவு செய்யவும் தயாராக இருப்பார் கள், ஊரார் அப்படிச் சொல்லு வார்கள், இப்படிச் சொல்லு வார்கள் என்பது பற்றிக் கவலை இல்லை அவர்களுக்கு!

நான்காவதாகத் தோழிகள், காதல் விஷயமாக எந்தவிதமான பேச்சையும் அவர்களிடம் நாயகி பேசுவாள், அவர்களும் உத்ஸாகமாகப் பேசுவார்கள். தூது போகவும் தயாராக இருப்பார்கள்.

இந்தவிதமாக நாடகப் பாத்திரங்களை வகுத்து வைத்துக் கொண்டால்தான் காதல்க் கவிகளின் உண்மையான வேகமும் பாவமும் நமக்குத் தெரியும்.

### பூமி

முத்தொள்ளாயிர ஆசிரியருக்குப் பூமி சாஸ்திரம் தெரிந்தது என்று சொல்ல முடியாது. தமிழ் நாட்டைத்தான் சுற்றிச் சுற்றி வந்திருக்க வேண்டும். அவர் கொச்சி (வஞ்சி) அவருக்குத் தெரிந்த இடம். அதை ஒட்டியுள்ள முசிறி என்ற துறைமுகம் அவருக்குத் தெரியும்.

உறையூரையும் காவிரியையும் ரொம்ப அனுபவித்தவர். காஞ்சிபுரமும் தஞ்சாவூரும் அவருக்குத் தெரிந்த நகரங்களே.

மாந்தை என்கிற ஊரையும் சொல்லுகிறார். அது எங்கேயுள்ளது என்று தெரியவில்லை.

பாண்டி நாட்டைப்பற்றி அவருக்கு ரொம்ப அனுபவம். மதுரையில் வசித்திருக்கிறார். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள கொகை என்ற துறைமுகப்பட்டினத்தையும், அங்குள்ள கடற்கரையையும் முத்துவளத்தையும் ரொம்ப அனுபவித்திருக்கிறார்: அது மாத்திரமல்ல, தாம்பிரபரணி ஆறு உற்பத்தியாகிற பொதிகை மலைச் சாரலையும் அங்குள்ள சந்தன மரத்தின் வளத்தையும், வன போஜனம் செய்பவர்களின் உல்லாச வாழ்க்கையையும் ரொம்ப ரொம்ப அனுபவித் திருக்கிறார். ஈழத்துக்கும் அவர் போயிருக்கிறார் என்றே சொல்லவேண்டும்.

ஏதோ நூறு பாடல்களை வைத்துக் கவிஞருடைய பூமி சாஸ்திரத்தை அளக்கிறோம். தொலைந்து போன 2600 பாடல்களையும் பார்க்கக் கிடைத்தால், அவர் கண்டு அனுபவித்த உலகு ஒரு வேளை விசாலமாகவே இருக்கக் காணலாம்.

அவர் பார்த்த ஜட உலகம் தான் சிறிதாகத் தோன்றுகிறது. அவரது இதய உலகத்தைப் பார்த்தோமானால் எவ்வளவாகவோ விரிந்து விடுகிறது. அது பேரண்டத்தையே தனக்குள் சுருட்டிக்கொண்டிருக்கிறது கவிஞரது இதயம்!

### கவி உருவம்

எந்தக் கலையிலும் உணர்ச்சி பாவந்தான் முக்கியம்: அது ஒன்றுதான் வேண்டும் என்றாலும் குற்றமில்லை. முத்தொள்ளாயிரச் செய்யுள் ஒவ்வொன்றிலும்வெகு அற்புதமான உணர்ச்சி பாவங்களைப் பார்க்கலாம். எவ்வளவுக் கெவ்வளவு உணர்ச்சி பாவத்தோடு நம்முடைய இதயம் ஒட்டுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு கவி உருவத்திலுள்ள அழகும் சுவையும் அற்புதமும் நமக்கு விளங்கும்.

### வெண்பா செய்யும் அபிநயம்

நமக்குக் கிடைத்த பாடல்கள் எல்லாம் வெண்பாக்கள் தாம். வேறு பாவினங்களைக் கவிஞர் கையாண்டிருக்கலாம். ஆனால் அவைகள் நம் கைக்கு வரவில்லை.

ஒவ்வொரு வெண்பாவும் ஒரு தனியான தாளத்தோடு நடனமாடுகிறது—அதனுடைய உறுப்புக்கள் அற்புதமான பாவங்களைப் பிடித்துக் காட்டுகின்றன.

நீராட்டி நீங்(கு)என்ருல்
நீங்குமோ
இது சொல்லபி நயந்தான் !

கோபவெறி கொண்ட போர் யானேயின் கை வரிசையைப் பாருங்கள்: (வெண்பாவின் கடைசி அடி)

திங்கள் மேல் நீட்டுந்தன்
கை !

பவனி வரும்போது சேரனேத் தன் பெண் பார்த்து விட்டால் மோசம்; காதல் நோய்க்கு உள்ளாய் விடுவாள். ஊரார் வம்புக்கும் உள்ளாகி விடுவாள் என்று மகளே வீட்டுக்குள் போகச் சொல்லி வாசல் கதவையும் அடைத்து விடுகிருள் தாய்.

ஆனுல் மகள் தோழியிடம் என்ன சொல்கிருள் :—

ஆயிழையாய்! என்னே
அவன் மேல் எடுத்துரைப்பார்
வாயும் அடைக்குமோ தான் ?

கதவு ஒன்றைத் தானே அடைக்கலாம்? வேறு என்ன செய்ய முடியும் தாய்—என்ற பாவத்தை இந்த இரண்டு அடிகளும் எப்படி அபிநயம் பிடித்துக் காட்டுகின்றன பாருங்கள் !

பாட்டுக்கு உருவம் என்ருல், இந்த விதமாக அதன் உறுப்புக்கள், பாவத்தை எடுத்துக்காட்ட வேண்டும். இவ்வளவுக்கும் தமிழ் மொழி அதிசயமாய் உதவுகிறது!

கவி என்று சொல்லும்போது ஏதோ அதிலுள்ள விஷயம் ஒன்றைச் சொல்ல வந்தது என்று சாமான்ய மக்கள் எண்ணலாம். வேறு சிலர், அதிலுள்ள உணர்ச்சியைத் தெரிந்துகொண்டால் போதும் என்று எண்ணலாம். ஆனுல் கவியில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது உணர்ச்சியானது பாவ உருவத்தில் வந்து வெளிப்படுகிறதா என்பதுதான்! இந்த உருவத்தின் மூலமாகவே, கவிஞருடைய உள்ளத்தில் எழும் உணர்ச்சியைப் பார்க்கிருேம்! அதோடு, அந்த உணர்ச்சியை வார்த்தை தாளங்களிலுள்ள நேரான, இயல்பான சம்பந்தத்தில் பார்க்கிருேம். அப்படிப் பார்க்கும்போதுதான் கவிஞரது இதயத்திலுள்ள அற்புதமான சிருஷ்டி தத்துவம் நம்முடைய இதயத்துக்கும் வந்துசேருகிறது. கவிஞருடைய சிருஷ்டி தத்துவத்தால், கவிஞர் இதயத்தில் பெருகிய ஆனந்தம் அவ்வளவிலும், நாமும் பங்கு கொள்கிருேம். முத்தொள்ளாயிர ஆசிரியர் இரண்டாயிர வருஷத்துக்கு முன் அடைந்த ஆனந்தத்தை இன்று நம்முடைய இதயம் அடைகிறது, நமது பாக்கியந்தான் என்ன!



வெளியிடுபவரும், ஆசிரியரும் இராம. மணிமேகலே, 4. தணிகாசலம் செட்டி ரோடு, சென்னே-17. அச்சிடுபவர்: கொணடா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரின்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னே-17.